மாலை நிலா – முழுமதி – கருங்கடல் – அருகிருந்து அடையும் ஆனந்தம். இதன் நிலையை என்னென்று சொல்வது! 'சந்திரன் கண்டு தலை தூக்கி நிற்கின்ருய் தண்மைமிகு கடலே' எனப் பல நாட்களுக்கு முன் நான் எழுதியது என் மனதில் தோன்றிற்று. காதலன் வரவுகண்டு திசை நோக்கி நிற்கும் காதலியின் நிலை — ஆண்டவன் அருள் நோக்கி அவன் நேர் நிற்கும் அன்பு நிலை, ஆகிய யாவும் இக்கடல்நிலை முன் காட்சி அளித்தன. வெள்ளலைகள் வீசும் காட்சி முருகனது பாதங்களைப் பண்புடன் அர்ச்சிப்பதுபோல் காணப்பட்டது. நிலவொளி பெற்ற நேரிய கடல்நிலை வெள்ளிய பெருந் தகடுபோல் காணப்பட்டது. அங்குத் தோன்றிய தோற்றம் கடற்ருேற்றமா கனல் தோற்றமா அன்றி எங்கும் நிறைந்த இறைவன் தோற்றமா என எண்ணத்தக்கதாய்க் காட்சி அளித்தது. முருகு என்பது அழகு, இளமை, மணம் முதலிய பல்வேறு பொருள்களை அளிப்பது என்பது எனக்கு அன்று உண்மையாயிற்று. நீலத் திரைக்கடல் – பால்போன்ற சந்திரன் – அச் சந்திரன் ஒளி கலந்த கடலது வெள்ளிய தோற்றம் — இவைகளை உன்னின் கடவுள் தன்மை தெள்ளிதிற்ருேன்றும். கடலல்ல, கந்தனது உருவம் அது. அடல் வேலாயுதன் அமர்ந்தினிதிருக்கும் அலை கொழிக்கும் செந்தில் அவன் உருவமாகவே விளங்கிற்று.

'எங்கணும் பணிவதனங்கள் எங்கணும் விழிகள்
எங்கணும் திருக்கேள்விகள் எங்கணும் கரங்கள்
எங்கணும் திருக்கழலடி எங்கணும் வடிவம்
எங்கணும் செறிந்தருள்செயும் அறுமுகத் திறைக்கே'

என்ற கச்சியப்பரது வாக்கு அங்கு உண்மையாயிற்று.

அங்குச் சென்று அமர்ந்தால் காலம் என்னும் அளவு நாம் அறியாமல் கடந்துசெல்லும்.

'இராப்பகல் அற்றவிடத்தே இருக்கை எளிதல்லவே' என்றார் அருணகிரிநாதர். ஆனால், செந்தூர் விழா அச்சொல்லையும் இல்லையாய்ச் செய்துவிடும். விழா நிகழ்ச்சியைக் கலை முறையாக ஆராய்வோமானால் இரவுபகல் என்ற வேற்றுமையே அவ்விடம் தோன்றாது என்பது வெட்ட வெளிச்சமாகிவிடும். இரவு பன்னிரண்டு மணி, ஒரு மணி வரையில் சொற்பொழிவின் பெருக்கம், நாட்டியக் கலை, வாத்தியக் கலை, இசைக் கலை யாவும் ஒன்றாய்ச் சேர்ந்து இரவைப் பகலாகச் செய்யும் என்பதில் சந்தேகம் ஒன்றும் இல்லை. மக்களது மனத்தியல்பை என்னென்று செர்ல்வது? சொற்பொழிவின் சுவைகண்டு அனுபவித்துக் கொண்டிருந்தவர் பலர். இசையின் எழில்கண்டு அதில் மகிழ்ந்திருந்தவர் பலர். கடலின் ஒலிகண்டு மணலில் தங்கி இருந்தவர் பலர். எங்கணும் தனித்த ஆடவரோ மகளிரோ தங்கவில்லை என்பதும் ஈண்டு உணர்த்தவேண்டுவது. இருமணத்தால் இன்புற்ற இறைவனும் செந்திற் கந்தப்பெருமானது அருள் வேண்டிய அன்பர்கள் கருத்தொருமித்த காதலர்களாகவே பெரும்பாலும் காட்சி அளித்தனர்,

'காதல் ஒருவனைக்கை பிடித்து—அவன்
காரியம் யாவினும் கைகொடுத்து
மாதரறங்கள் பழமையைக் காட்டிலும்
மாட்சிபெறச் செய்து வாழ்வோமடி'

என்ற அடிகளும்,

'எட்டு மறிவினில் ஆணுக்கிங்கே பெண்
இளைப்பில்லை காண் என்றுகொம்மி அடி'

என்ற அடிகளும்,

'ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக
வாழ்வ மிந்த நாட்டிலே'

என்ற அடிகளும் என் மனதில் தோன்றின. ஆண்களும், பெண்களும் கடற்கரையின் மீதமர்ந்து சந்திரனும் தண்கடலும் ஒன்றை ஒன்று கண்டு உவகை உற்றது போன்று தம்முள் மகிழ்கின்றனர். ஆண்டவன் திருச்சந்நிதியில் அத் தம்பதிகள் 'கண்ணிரண்டும் ஒன்றையே காண்' என்னும் பண்புப்படி ஒத்த மனத்தினராய் அவனடி வணங்கித் தம் வாழ்வை நல்வாழ்வாக்க வேண்டுகின்றனர். இளங் குழந்தைகள் முருகனது இளமைத் தன்மையைக் கண்டு நமக்கொத்த நண்பனே என எண்ணிப் புன்சிரிப்புப் பூக்கின்றன. வயதடைந்த பெரியோர்கள் தங்கட்குப் பற்றுக்கோடாக உள்ளது உலகில் வேறொன்றும் இல்லை ; ஆதலால் 'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப், பற்றுக பற்று விடற்கு' என்ற குறள் மொழிப்படி அவன் பாதங்களைப்பற்றிப் பாடுகின்றனர். பொதுவாக அவ் விழாவில் மகிழாதவரே இல்லை என்றால் மாற்றுண்டோ !

சொற்பொழிவாளர்களை வரவேற்ற முறையும், உணவளித்து உபசரித்த முறையும் உரைக்கத்தரமோ ? அப்பப்பா ! உணவளிக்க ஒரு அதிகாரி, பல சிப்பந்திகள். இருக்க இடத்திற்கு ஒரு அதிகாரி. செல்லுமிடமெல்லாம் வழிகாட்டச் சிறந்த அடியார்கள். வேளா வேளைக்குப் பரிமாறி அளிக்கும் பண்புடை உணவை உண்டு மகிழ்ந்தோம். 'செவிக்குணவில்லாத போது

சிறிது வயிற்றிற்கும் ஈயப்படும்' என்ற குறள் அங்கு உண்மையாயிற்று. இடைவிடாச் சொற்பொழிவும், இன்னிசை அரங்கும் இன்பம் ஊட்டிக்கொண்டிருந்த எங்கட்குப் பசியும் தோன்றவில்லை. பாரெல்லாம் தருவ தெனப் பகர்ந்தாலும் இவ்வின்பத்திற்கு அது நேரா காது. செவியுணவும், சுவை உணவும் ஒருங்கே அளித்த அத்தேவத்தானச் செல்வர்களை வாயார வாழ்த்துவ தன்றி வேறு என்னென்பது !

மக்களது பக்திநிலை மதிப்பிடத் தக்கதோ ! காணிக்கை அளிக்குமுறை கருத்திலிடப்படுமோ! 'முழு மனதோடு அளிக்கும் ஏழையின் காணிக்கை யாதினும் சிறந்தது' என்னும் இயேசுவின் மொழிப்படி நடக்கும் மனப்பூர்வமான காணிக்கை முறையும் மனதிற் கொள்ளல் வேண்டுவதாகும். தமக்கு உகந்த பொருள் எம்பெருமானுற்கு ஏற்றதாகும். அன்புமுறையில் வழி பட்ட அடியார்கள் தத்தம்மிடங்கொண்ட பொருளால் அடியாரைப் புரக்கவில்லையா? தாம் விரும்பிய பொருளை ஏழை எளியவர்கள் மனப்பூர்வமாக மன்னனும் செந்திற் கந்தனுக்குச் செலுத்துகின்றனர். நான் காணிக்கை செலுத்தும் உண்டியின் பக்கத்தில் சுமார் ஒரு மணி நேரம் உட்கார நேர்ந்தது. ஆகா! அந்த ஒரு மணி நேரத்தில் நான்கண்ட காட்சி என்னே !

தாய் ஒருத்தி - இளம் சேய் - பால்மணம்மாருப் பச்சிளங் குழந்தை—முருகனை வழிப்பட்டனள். தனது அருமைக் குழந்தையின் கையில் காணிக்கையைக் கொடுத்தாள். குழந்தை அதை விளையாட்டாகப் பிடி யாது விட்டது ; கீழே விழுந்தது. தாய் குனிந்து எடுத்தாள். குழந்தையின் கையில் வைத்து, அக்

கையைப் பிடித்து உண்டியில் போடுமாறு செய்தாள். பல் தோன்ற வாய் திறந்தது. தாய் மகிழ்ந்தாள். தாய் பெற்ற இன்பம் வேறு யார் பெற்ருர் வையகத்துள்! திரு நீறளித்தனர் உண்டியின் பக்கத்திருந்தவர். குழந்தை முகம் நீற்ருல் நிறைந்தது. அத்தாய் கடல் நலம் காணச்சென்ருள்.

காதலர்கள் – இணைபிரியாக் காதலர்கள் -ஆண்டவனுக்குக் காணிக்கை செலுத்த முன்வந்தனர். காணிக்கை செலுத்துவது யார்? தலைவன் தலைவியை நோக்கினுன். தலைவி குனிந்தாள். காணிக்கையைக் கையிலே கொடுத்தான் தலைவன். 'நீங்கள் தான் போடுங்களேன்' என்ருள் அவள். 'நீயே உன்கையால் போடு' எனக் கொடுத்த பணத்தோடு கையைத் தூக்கிவிட்டான். உண்டியில் பணம் விழும் சத்தம்கேட்டது. அவர்கள் உள்ளத்தில் உவகை பூத்தது. நீறு பெற்றனர். நேராகத்திரும்பினர்.

இளம் வாலிபன், தனது பணப்பையைத் (Money Purse) திறந்தான். கடலை நோக்கினுன். ஆறுமுகன் அடியை நோக்கினுன். காசு எடுத்தான். கல்லெனும் ஓசை உண்டாக உண்டியிற் போட்டான். தான் விரும்பிய பொருளைப் பெற்றதாகப் பெருமகிழ்வுற்ருன். திருநீற்றைச் சிறக்கப் பூசினுன். புன்முறுவல் தோன்றிற்று. அவன் 'மறுமுறை மங்கையோடுவர அருள்புரிக' என்று வேண்டியது போலிருந்தது.

ஒரு கிழவி, 70 வயது இருக்கும். கோயில் வலம் வந்தாள், விழுந்தாள், எழுந்தாள், பணிந்தாள், உண்டியினிடம் வந்து உட்கார்ந்தாள். அவள் உட்கார்ந்தது

ஔவையார் அறுமுகனிடம் உபதேசம் பெற நின்றது போல் தோன்றிற்று. நானும் என்ன என்று நோக்கினேன். முந்தாணையை எடுத்தாள். அதன் முனையில் ஒரு முடிச்சு இருந்தது. அதை அவிழ்த்தாள். முருகனுக்குக் காணிக்கையா யிருந்தது. மனப்பூர்வமாக அக்காணிக்கையை உண்டியில் இட்டாள், உவந்தாள். தெய்வத் திருநீறு பூசிக்கொண்டே, சொற்பொழிவு செய்யும் இடத்தை நாடிச் சென்று முருகன் பெருமையைக் கேட்க முன்நின்ருள்.

பணமாக வந்த காணிக்கை இப்படியானல் பொருளாக வந்தவைகள் பல. தத்தம்மால் இயன்ற வரையில் தத்தம்மிடம் கிடைத்த பொருள்களை யெல்லாம் மக்கள் மலை மங்கை மகனுர்க்கு அளித்தனர். ஆடுகள் பல, மாடுகள் பல, கோழிகள், சீனிக்கிழங்கு, பனைக்கிழங்கு, உப்பு, அரிசி, நெல் ஆகிய பல்வேறு பொருள்களும் காணிக்கையாகக் கொடுக்கப்படுமேயானல் மக்களது மனப்போக்கை என்னென்றெடுத்தியம்புவது. தத்தமது கோரிக்கைகளைக் குகன் நிறைவேற்றி வைப்பான் என்ற திண்ணிய எண்ணமே அவர்களை இவ்வழியில் இயக்கியது. தாம் வேண்டியவற்றைப் பெருமலா இக்காணிக்கைகளை யெல்லாம் அவர்கள் அளிப்பார்கள். இல்லையன்ருே ! வேண்டுவார் வேண்டியதை அளிக்கும் வித்தகன் ஆறுமுகன் என்பதற்கு இதனினும் சிறந்த சான்று உண்டோ !

தென் பாண்டி நாட்டு மக்களது வாழ்வு சாலச் சிறந்தது. எளிய வாழ்வில் தம்மை ஈடுபடுத்த எல்லாம் வல்ல இறைவனை வணங்குகின்றனர். அவர்களது நடை முறையும், செயல் வகையும் யாவர்க்கும்

எக்காலத்தும் இன்பம் அளிப்பதேயாகும். பெண்களும் ஆண்களும் களங்கமற்ற உள்ளத்தோடு, இறைவனிடம் ஒன்றிய மனத்தினராய், அவன் புகழ் பாடி, அவன் புகழ்கேட்டு அவனது அடியாரோடு கூத்தாடிக் குலாவிச் செல்லுங்காட்சிகள் உள்ளத்தை உருக்குவனவாகும். 'வணங்கத் தலை வைத்து வாய் கழல்கள் வாழ்த்த வைத்து, இணங்கத்தன் சீர் அடியார் கூட்டமும் வைத்த' இறைவனது அருள் வழியே மக்கள் நடக்கின்றனர்.

செந்தூரது நல நிலையும், இயற்கை வளனும் எடுத்தியம்ப இயலாது. அருணகிரியார் அன்று பாடிய இயற்கை ஓவியம் இன்று வரையில் பிரதிபலித்துக் கொண்டிருப்பது கண்கொளாக் காட்சியே யாகும்.

அப்பப்பா! அதன் பெருமை என்னென்று சொல்வது, இவைகளில் எதைச் செல்வமென்று செப்புவது.

ஆடவரும் பெண்டிரும் அணி வகுத்தாற்போல் அழகாக விழாவைச் சென்றுகண்டு திரும்பும் காட்சியைச் செல்வமென்று சொல்வேனோ! ஆறுமுகனது அழகுடைத் தேர் ஓட்டத்தைச் செல்வமென்று சொல்வேனோ! சொற்பொழிவையும், சளைக்காது அவைகளை இடை விடாது கேட்டுக்கொண்டிருக்கும் அன்புடை மக்களையும் செல்வமென்று சொல்வேனோ! அறிஞர்களது சொற்பெருக்கைச் செல்வமென்று சொல்வேனோ! பண்ணின் இசை கேட்ட பரன் என்ற மொழிப்படி நடைபெற்ற இசை அரங்குகளைச் செல்வமென்று சொல்வேனோ! அன்பர்களது உபசரிப்பைச் செல்வமென்று சொல்வேனோ! மலை போன்ற பாறைகளைக் குடைந்து மதிநிறைந்த செயலால் கோயிலாக்கிச் சீர்பெற விளக்கி நின்ற அச்செயலைச்

செல்வமென்று சொல்வேனு! ஆறுமுகன் பாதப் போதுகளுக்கு அலை மலரால் அர்ச்சிக்கும் அலை கடற் ரேற்றத்தைச் செல்வமென்று சொல்வேனு! அன்பர் களது அரகர முழக்கையும் அருந்தமிழ்ப் பெருக்கையும் செல்வமென்று சொல்வேனு! காணிக்கை அளிக்கும் கண்கொளாக் காட்சியைச் செல்வமென்று சொல்வேனு! தெய்வீகக் காதலரது நிலையைச் செல்வமென்று சொல் வேனு! தேர் இழுக்கும்போழுது வேல் ஒலியின்றி வேற்ருெரு ஒலி தோன்ருத் தூய்மையைச் செல்வ மென்று சொல்வேனு! எதைச் சொல்வேன்?

அங்கிங்கெனுதபடி எங்கும் நிறைந்து அன்பரது அகத்தாமரையின் மீதிருக்கும் தெய்வ விளக்கொளியாக விளங்கும், இயற்கையில் இயங்கி அமரரிடரும் அவுணருடலும் அழிவுபடச் செய்து, செந்தின் மாநகர் கோயில் கொண்டு, ஒவ்வொரு அன்பரது மனத் தாமரையைவிட்டு நீங்காது, வேண்டுவார்க்கு வேண் டியதை அளித்து, உள்ளங்கவர்ந்து, பக்குவப்பட்டவுடன் தானே வந்து ஆன்மாக்கள் தளை நீக்கி ஆட்கொண்டரு ளுவானுகி, மேற் கூறிய செல்வங்களுக்கெல்லாம் செல்வ னுகிய கந்தப் பெருமானை அன்றிப் பெருஞ் செல்வம் உளதோ! அன்னுர் என்னிடம் அருள்புரிந்து ஆண்டழைத்தார். அவரிடம் குறை இரந்தேன்; குறை முடித்தேன். செந்தூர்ச் செல்வனுகிய வேலாயுதத் தோன் பாதம் பரவ, என்னை அவண் அழைத்து அவன் புகழ் பாட வைத்த தேவத்தான அறக்காப்பாளர்களுக் கும் அன்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்து இக்கட்டுரையை முடிக்கின்றேன்.

வாழிய இன்பம்! வாழ்க நல்லறங்கள்!

## ஓண விழா  

ஓணம் என்றதும் நம் அனைவர் நினைப்பும் மலையாளிகளைச் சென்று சேரும். அவர்களே இந்த விழாவினை ஆண்டுதோறும் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். ஆவணி மாதத்து முழு மதியுடன் கலந்த திருவோண மீன் பெரும்பாலும் இந்த விழாவின் நாளாக அமைகின்றது. மலையாளிகளுக்கு இந்த நாளே ஆண்டின் மிகமிகச் சிறந்த நாள். மலையாளிகள் ஆண்டில் மூன்று முக்கியமான பண்டிகைகளைக் கொண்டாடுகிறார்கள். மார்கழியில் வரும் திருவாதிரை விழாவும், புத்தாண்டுத் தொடக்கமாகிய 'விசு' என்னும் விழாவும், இவ்வோணமும் அவர்தம் உயர்ந்த விழாக்கள். அவற்றுள்ளும் இந்த ஓணமே சிறந்தது. இன்று மலையாளிகள் தங்கள் வாழ்வின் ஒரு திருநாளாகக் கொண்டாடும் இத்திருவிழா ஒரு காலத்தில் தமிழர்தம் பெருவிழாவாய் இருந்தது என்று கூறின், பலர் வியப்பெய்துவர். பெற்றதுகொண்டு தாமும் சுற்றமும் உண்டு மகிழ்ந்திருந்த ஒரு விழாவாக ஓணவிழாவானது தமிழ் நாட்டில் நடை

பெற்று வந்தது. சைவர் வைணவர் என்ற இரு வேறு வகுப்பினரும் இந்நாட்டில் இவ்விழாவினைக் கொண்டாடி இவ்விழாவின் மூலம் ஆண்டவனைப் போற்றிய காலம் இருந்தது என்பதை எண்ணும்போது மகிழ்ச்சி பிறக் கின்றதன்றோ ?

தேவாரம் பாடிய ஞானக்குழந்தை சம்பந்தரைப் பற்றி அறியாத தமிழர் இருக்க மாட்டார்கள். அவர் தமிழ் நாட்டுத் தலந்தோறும் சென்று இறைவனைப் பாடிப் பரவி வந்தவர். இப்போது சென்னையின் பகுதி யாய் இருக்கும் மயிலாப்பூர் என்னும் திருமயிலைக்கு அவர் இறை வழிபாட்டின் பொருட்டு வந்தார். அவ் வூரில் இன்றும் 'கபாலி' என்னும் பெயருடன் இறை கோயில் கொண்டுள்ளனன். அன்றும் அக்கடவுள் அதே பெயரோடுதான் அடியவருக்கு அருள் புரிந்தான். மயிலையில் வாழ்ந்த செட்டியார் ஒருவர் தம் மகள் இறந்தபின் அவள் எலும்பை ஒரு குடத்தில் இட்டு வைத்திருந்தார். அவர் ஞானசம்பந்தர்வரின் அவர் தமது அருள் நோக்கால் எலும்பையும் பெண்ணாக்கக்கூடும் என்று திட்டமாக நம்பியிருந்தார். நம்பிக்கைதானே நாக ரிகத்தின் அடிப்படை! அச்சிவநேசர்தம் நம்பிக்கையும் வீண்போகவில்லை. சம்பந்தரும் வந்தார். சிவநேசரும் தம் மகளாரது எலும்பிருந்த குடத்தை அவர்முன் கொண்டு வந்து வைத்தார். அவரும் கபாலியின் அருளை நினைந்தார்; சித்தத்தைச் சிவமாக்கினர். உள்ளம் திறந் தது. உற்ற சொற்கள் பாட்டாக உருப்பெற்று ஒன்றன் பின் ஒன்றாக எழுந்தன. அம்மயிலைப் பதிகத்தே அவர் மறைந்த பெண்ணாகிய அப்பூம்பாவையை நோக்கி, 'மயிலையில் நடைபெறும் விழாக்களையெல்லாம் காணு

மல் செல்லும் நிலை இரங்கத்தக்கது !' என்று பாடு கின்றார். அவற்றுள் ஒரு பாடல் இது :

'மைப்பயந்த ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள்
துய்ப்பனவும் காணாதே போதியோ பூம்பாவாய் !'

இப்பாடலுள் அம்பூம்பாவை என்னும் மங்கை நல்லாள் கபாலீச்சரம் அமர்ந்த இறைவரது ஐப்பசி மாத ஓண விழாவினைக் காணாது செல்லும் நிலையைக் காட்டு கின்றார் சம்பந்தர். அவ்விழா அனைவரும் கலந்து உண் ணும் பெருவிழாவாக அமைந்தது போலும்! அந்தக் கலந்துண்ணும் நல்லவரை அருந்தவர் என்கின்றார் சம்பந்தர். ஆம்! இன்றும் மலையாளநாட்டு ஓணவிழா, பயிரிட்ட உணவுகொண்டு உண்டாகும ஒரு விழாவாகத் தானே காண்கின்றது ? இரண்டிற்கும் ஒரே ஒரு வேறு பாட்டைத்தான் காண்கின்றோம். இவர்கள் விழா ஆவணியில் வருகின்றது. ஆயிரத்து மூந்நூறு ஆண்டு களுக்கு முன் அது ஐப்பசியில் வந்தது. இரண்டிற்கும் இடையிடு இரண்டு மாதங்கள். ஆண்டையும் திங்களை யும் நாட்களையும் கணக்கிட்டு வகையில் இந்த மாறுபாடு ஒருவேளை அமைந்திருக்கலாம்.

தமிழ் நாட்டில் சைவ வைணவராகிய இரு சமயத்த வரும் இவ்விழாவினைக் கொண்டாடிய சிறப்பினில் சைவர் கொண்டாட்டத்தை மயிலையில் கண்டோம். அதே மயிலையில் கபாலீச்சரம் இன்றும் இருக்கிறது. ஆனால் ஓண விழாதான் அங்கு நடைபெறுவதைக் காணவில்லை தமிழ் நாட்டவர் பல நல்ல பழக்க வழக்கங்களைத் தம் உற்ற சகோதரர்களாகிய மலையாளிகளிடம் ஒப்

படைத்துவிட்டார்கள். இங்கு வழக்கத்தில் இல்லாத பல நல்ல தமிழ்ச்சொற்கள் இன்றும் மலையாள நாட்டு வழக்கத்தில் இருப்பதையும் காணலாம். திருவாதிரை விழாவும் மார்கழி நோன்பு நோற்றலும் இன்றும் அங்குச் சிறப்பாகப் போற்றப்படுகின்றன. எனவே, தமிழர் தம் ஓண விழாவாக ஒரு காலத்திருந்த இந்த விழா, இன்று தமிழரால் கைவிடப்பட்டாலும், மலையாளிகளால் பொன்னே போலப் போற்றப்படுகின்றது.

ஓணம் இருபத்தேழு நட்சத்திரங்களுள் இருபத்திரண்டாவது. அதற்குச் சிறப்பு எப்படி வந்தது? வைணவர் அந்நாளில் திருமால் பிறந்தார் என்று கூறுவர். பெரியாழ்வார் திருமால் பிறந்த நாளைக் குறித்து, 'நீ பிறந்த திருவோணம்' என்று பாடுகின்றார். எனவே, திருமால் பிறந்த நாளைக் கொண்டாடல் வைணவர்களுக்கு இயல்புதானே? தேவாரத்திலும் திருமாலைக் குறிக்க 'ஓணப்பிரான்' என்னும் தொடர் வருகிறது. 'ஓணப்பிரானும் ஒளிர்மாமலர் உத்தமனும்' (தேவா. 643-10) என்பது தேவாரம். நாலாயிரத்தில் திருமாலைக் குறித்துச் செய்யும் ஓண விழாவில் பல்வேறு ஒலிகள் நிறைந்திருந்தன என்ற குறிப்பும் காண்கின்றோம். 'ஓண விழாவில் ஒலியதிர' (இயற். 4-41) என்பது அது. பத்துப் பாட்டில் ஒன்றாகிய மதுரைக் காஞ்சியிலும் 'மாயோன்மேய ஓணநன்னாள்'(591)என்று ஓணம் திருமாலுக்கு உரிய நாளாகப் பேசப்படுகின்றது. இவ்வாறு தமிழ் நாட்டில் வாழ்ந்த சைவ வைணவராகிய இரு சமயத்தவர்களுக்கும் பெருவிழாவாக அமைந்தது இவ்வோண விழா.

இன்னும் ஓணம் என்ற சொல்லுக்கு ஆறு என்ற பொருளும் உண்டு. 'கங்கையாதி ஓணநீர்' என்று சேது புராணம் குறிக்கின்றது. இவ்வோண நன்னாளில் மக்கள் புனிதத் துறைகளில் நீராடிச் சிவனையோ திருமாலையோ வழிபடுவார்கள் போலும்! மக்களது புறத் தூய்மை நீராலும் அகத்தூய்மை வாய்மை நிறைந்த வழிபாட்டாலும் நடைபெறும் ஒரு நல்ல விழாவே ஓண விழா என்பது துணிபு. ஆம்! இத்தகைய சிறந்த விழா இன்று தமிழரால் கைவிடப்பட்டது. எனினும், மலையாளிகள் சிறக்கப் போற்றுகின்றார்கள். அவர்கள் போற்றும் விதத்தை இனிக் காண்போம்:

மலையாள நாட்டில் இவ்வோண விழா ஒரு சமயச் சார்பான விழாவாகக் கொண்டாடப்படுவதன்று; நாட்டு விழாவாக அமைகின்றது சாதி மத வேறுபாடற்று அனைவரும் இவ்விழாவில் பங்குகொள்ளுகின்றனர். சைவ வைணவத் தொடர்போடு இவ்விழா இங்குப் பண்டை நாட்களில் போற்றப்படினும், மலையாளிகள் சமயத் தொடர்பற்ற ஒரு பெருவிழாவாகவே இதைப் போற்றுகின்றார்கள். ஓணநாள் அவர்களுக்குச் சிம்ம மாதத்தில்—அதாவது— ஆவணியில்— திருவோண நிறைமதி நாளாய் அமைகின்றது. பெருஞ்செல்வர் இவ் விழாவை இருபத்தைந்து நாட்கள் கொண்டாடுவார்கள். ஆவணித் திருவோணத்துக்கு முன் பத்து நாட்களிலும், பின் பதினைந்து நாட்களிலும் இவ்விழா நடைபெறும். ஆவணித் திருவோணத்துக்கு முன் வரும் அத்த நாள் தொடங்கி, அடுத்த மகநாள் வரையில் இருபத்தைந்து நாட்கள் இவ்விழா நடைபெறும். இக்காலத்திலே செல்வர்கள் தம் சுற்றமும் பிறரும் உடனிருந்து உண்டு

களிக்க மகிழ்வார்கள். ‘ ஓண விழாவும் அருந்தவர்கள் துய்ப்பனவும் காண ’ வேண்டுமென்று சம்பந்தர் கூறியது இச்சிறப்பைத்தான் போலும் !

செல்வர்கள் இருபத்தைந்து நாட்கள் கொண்டாடச் சாதரான மக்களும் ஏழைகளும் திருவோணத்திலும் சாதாரண மக்களும் ஏழைகளும் திருவோணத்திலும் அதற்கு முன்னும் பின்னும் இவ்விரண்டு நாட்களிலும் ஐந்து நாட்களில்—இவ்விழாவைக் கொண்டாடுகின்றனர். அவற்றிலெல்லாம் சிகரமாகத் திகழும் நாள் திருவோண நாளேயாம்.

இவ்விழாவைப்பற்றி அந்நாட்டில் வழங்கும் கதை ஒன்றுண்டு : மலைநாட்டை மாபலிச் சக்கரவர்த்தி ஆண்டதாகவும், திருமால் அவரிடம் வாமனனாய் வந்து மூவடி மண்வேண்டியதாகவும், இரண்டடியால் நிலத்தையும் வானத்தையும் அளந்து மூன்றாவது அடியால் மாபலியைக் கீழ் உலகுக்கு அனுப்பியதாகவும் கதை வழங்குகின்றது. மாபலி அவ்வாறு கீழ் உலகம் அனுப்பப்பெறும்போது, திருமாலை நோக்கி, ஆண்டுக்கொரு நாள் தான் தன் நாட்டை வந்து காண வரந்தர வேண்டுமென்று கேட்க, திருமால் அவ்வரத்தைத் தந்தாராம். அம்மாவலி வந்து காணும் நாளே இந்த ஓண நாள். தம்மை ஆண்ட நல்லரசனை மாந்தர் இன்முகமும் பிறவும் கொண்டு வரவேற்பதே ஓண விழாவாகும். அன்று திருமால் வந்து அருள் புரிந்த நாளைத்தான்போலும் தமிழர்கள் ‘ மாயோன் மேய ஓண நன்னாள் ’ என்று கூறிப் போந்தார்கள் !

மேற்கண்ட வரலாறு வைணவத் தொடர்புடையதாயினும், சிவத் தொடர்புடைய வரலாறும் ஒன்றுண்டு.

மாபலி ஆண்ட காலத்து அவன் தலைநகராகிய ‘திரிகாகரா’ என்ற பெருநகரில் அவன் சிவபிரானுக்கு ஆண்டுக்கொரு பெருவிழாச் செய்தான். அந்நகர் இன்று வடதிருவாங்கூர்ப் பகுதியில் உள்ளது. அத்திருவிழாவினைக் காண ஆண்டுதோறும் மலைநாட்டு மக்கள் அனைவரும் திரள்திரளாகச் செல்வார்களாம். காலப்போக்கில் அனைவரும் ஓரிடத்தில் வந்து சேர்வதென்பது கடினமாகத் தோன்ற, மாபலி தம் மக்களை அவரவர் இல்லத்திலேயே ‘திரிகாகரா அப்பன்’ உருவம் அமைத்து, வழிபட ஆணையிட்டனனும். அவர்களும் அவ்வாறே தத்தம் இல்லத்தில் பூத கணங்கள் புடைசூழ இருக்கும் திரிகாகர அப்பன் திருவுரு அமைத்து, அன்று முதல் இன்றுவரை வழிபட்டு வருகிறுர்களாம். மலைநாட்டு மகளிர் இந்த ஓண விழா ஒன்றிலேதான் தத்தம் வீட்டு வாயில்களில் அரிசி மாவினுல் கோலமிட்டு அழகு செய்வார்கள் என்பர்.

தமிழ் நாட்டு இலக்கியச் சான்றுகளுக்கு ஒப்ப, சைவ வைணவச் சார்போடு அவ்வோணம் அமையினும் அது வெறுஞ் சமயவிழாவாய் அமையாது, நாட்டு விழாவாய் அமைந்துள்ளது என்று மேலே கூறினேம். ஆம்! அவ்விழா, சமய விழாவாக அன்றி, உழவர் விழாவாகவும் காட்சி தருகின்றது. தென்மேற்குப் பருவம் தந்த கோடை மழையால் நிலம் திருத்திப் பயிரிடப்பெற்ற முதற்பயிரின் அறுவடைக் காலம் அது. அறுவடையில் பெற்ற பொருள்கொண்டு நாட்டில் பசியும் பிணியும் பகையும் நீங்க அனைவரையும் சேர்த்து வைத்து விருந்தளிக்கும் விழாவே இவ்வோண விழா.

இவ்விழாவில் மலையாளிகள் புத்தாடை புனைவார்கள். 'நேந்திரப் பாயசம்' என்ற வகையில் அவர் தம் நாட்டுத் தனி விளைவின் உடைமையாகிய வாழைக்காயின் பயனைத் துய்ப்பார்கள். செல்வர்கள் ஏழைகளுக்கு உடையும் உணவும் கொடுத்துச் சிறப்புச் செய்வார்கள். ஏழைகள் தத்தம் வயலிலும் சோலையிலும் விளைந்தபழம் முதலியவற்றைக் கையுறையாகக்கொண்டு தந்து செல்வரை வணங்குவர். பெண்கள் ஆடியும் பாடியும் மகிழ்வார்கள். இளஞ்சிறுவர் பறை முழக்கி, மலர் பறித்துச் சிவ உருவத்தின்மேலிட்டு மகிழ்வர். வீரர்கள் 'ஓணத்தாலு' போன்ற பல பல விளையாடல்களில் ஈடுபடுவர். மலையாள ஆண்டின் தொடக்க நாளே ஓண நாளாய் அமைகின்றது. ஆம்! இவை அனைத்தையும் எண்ணித்தான் போலும், ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர்ச் சம்பந்தர்,

'ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள்
துய்ப்பனவும் காணுதே போதியோ பூம்பாவாய்!'

என்று பூங்கோதையைக் கண்டு இரங்கிக் கூறி இவ் விழாவின் ஏற்றத்தைச் சிறப்பித்தார்!

இவ்வாறு ஒருகால் தமிழ்நாட்டின் சிறந்த விழாவாக ஓணம் அமைந்திருந்தபோதிலும், அதன் அடிச்சுவடுகளை அறியாமல் தமிழர் கைவிட்டுவிட, அவர் தம் உடன்பிறந்தவர்களாகிய மலையாளிகள் அவ்விழாவைத் தம் விழாக்களிலெல்லாம் தலைசான்ற விழாவாகக் கொண்டாடும் நிலையினை எண்ணத்தான் வேண்டும். தமிழர் எத்தனையோ பழக்க வழக்கங்களைக் கைவிட்டு விட்டனர். அவற்றுள் பெரும்பாலன இன்றும் மலை

யாள மக்களால் போற்றப்படுகின்றன. மலைநாடு தமிழ் நாடாய் இருந்தமை கண்கூடு. ஒருசில நூற்றுண்டுகட்கு முன்னர் அங்கு வழங்கிய மொழி தமிழ்தானே! எத்தனைத் தமிழ்ப் பெரும்புலவர் அம்மலை நாட்டில் வாழ்ந்து, செந்தமிழை ஓம்பி வந்தனர்! இன்று அத்தகைய தமிழ்ப் புலவர் இல்லாவிடினும், அங்கு வாழ்கின்ற மலையாள மக்கள் தமிழர்தம் பழக்க வழக்கங்களை மறவாது ஓம்பும் நிலை கண்டு, 'அவர்தம் விழாக்கள் சிறக்க!' என வாழ்த்துகின்றேன்! வாழ்க ஓண விழா!

நவராத்திரி என்பதும், தசரா என்பதும் தமிழர்களுக்குப் புதிய சொற்களல்ல! புரட்டாசி மாதத்தில் அமாவாசையைத் தொடர்ந்து வருகின்ற அடுத்த ஒன்பது நாட்களையே இவ்வாறு நவராத்திரி என்ற பெயரால் வழங்குவர். மற்ற இரவுகளுக்கு இல்லாத ஒரு புதுமை இவைகளுக்கு என்ன ஏற்பட்டுவிட்டது? அவைகள் ஆற்றாத ஒன்றை இவை என்ன சாதிக்கின்றன? ஒன்றுமில்லை. ஆனால், அக்காலத்தில் நாட்டில் நடைபெறுகின்ற கொண்டாட்டங்களைக் காணின், அக்காலம் ஏதோ குதூகலம் நிறைந்த காலமாகவே தோன்றும் என்பது உறுதி.

தமிழ் நாட்டில் மட்டுமன்றி, மைசூரிலும் வங்காளம் முதலிய வடநாட்டுப் பகுதிகளிலுங்கூட இத் தசராக் கொண்டாட்டம் சிறப்புற நடைபெறுவதை அறியாதார் யார்? அந்த நாடு முழுவதும் அக்காத்தே எங்கும் 'விளக்கொளி'—எந்நாட்டிலிருந்தும் பலர்

அந்த நாட்களில் மைசூரில் வந்து கூடி விழாவில் கலந்து கொள்வர். அந்த ஒன்பது நாட்களிலும் மைசூர் உண்மையில் ஒரு பேரொளி நகரமாய்க் காட்சியளிக்கும். தெய்வ உலகமோ என்று பலரும் ஐயுறும் வண்ணம் அவ்வூர் தோன்றும். கண்ணம்பாடி அணைக் கட்டுக்கு இட்ட பிருந்தாவனம், கண்ணனது உண்மைப் பிருந்தாவனத்தையும் தோற்கடிக்கும் வகையில் தோற்றமளிக்கும். இத்தனையும் எதற்காக நடைபெறுகின்றன? அங்குள்ள மலைமேல் எழுந்தருளியிருக்கும் சாமுண்டீச்வரியைக் குறித்துக் கொண்டாடும் விழாவாகவே அது அமைகின்றது. அத்தெய்வத்திற்கு மைசூர் அரசகுடும்பத்தார் அந்த நாட்களில் பெருஞ் சிறப்புச் செய்து போற்றுவர். எனவே, அப்பெண் தெய்வத்தைக் குறித்து நடைபெறும் விழாவாக நவராத்திரி அமைகின்றது.

வங்காள நாட்டுத் தலைநகராகிய கல்கத்தாவில் அமைந்த காளிக்கும் அந்த ஒன்பது நாட்களில் பெருவிழா நடைபெறுகின்றது. இராமகிருஷ்ணர் போன்ற ஞானியர்களுக்கு அருள் ஞானம் பெய்து கொடுத்த அந்தப் பெருந்தெய்வத்திற்கு வழிபாடாற்றும் அந்த ஒன்பது நாட்களிலும் கல்கத்தா நகரம் சிறந்து விளங்குகின்றது. எனவே, அங்கும் காளி என்னும் பெண் தெய்வத்திற்குச் சிறப்பொடு பூசனை செய்யும் விழாவாகவே இந்நவராத்திரி விழா அமைகின்றது.

தமிழ் நாட்டில் உள்ள கோயில்தோறும் இவ் விழாக் கொண்டாடப் பெறுகின்றது. பெண் தெய்வத்தை முன்னிறுத்தி வழிபாடாற்றும் விழாவாகவே இதை அனைவரும் கொண்டாடுகின்றார்கள். எனவே,

இவ்விழாவுக்கும் பெண் தெய்வத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பது தேற்றம். இதுபற்றிப் புராண வரலாறும் உண்டு. இறைவன் பக்கத்தில் அமர்ந்து அருள் புரியும் பார்வதியைப் பற்றிய கதை அது. நாம் கதையை விட்டு, மேலே விழாவினைப் பற்றிக் காண்போம்.

தமிழ் நாட்டு மக்கள் பெண்களை அடிமைப்படுத்தி வைத்திருக்கின்றவர் என்பர். ஆனால், அவர்தம் வழிபாட்டு முறையினைக் கண்டால், அவர்கள் பெண்களுக்குத் தந்த ஏற்றம் விளங்காமற் போகாது. எல்லாவற்றையும் அவர்கள் பெண் உருவிலே கண்டார்கள். வளம் பெருக்கி விளைவளிக்கும் மண்ணை 'நிலமகள்' என்றார்கள்; செல்வத்தைத் 'திருமகள்' என்றார்கள். கல்வியைக் 'கலைமகள்' என்றார்கள். இப்படியே எல்லாவற்றையும் பெண் தன்மையில் வைத்துப் பாராட்டிப் பேசும் இந்த நிலையில் அவர்கள் எந்நாளும் பெண்களுக்கு ஏற்றம் தந்தே போற்றினார்கள்.

இந்தத் தசரா அல்லது நவராத்திரி விழாவும் பெண் தெய்வ வழிபாடு என்பதைப் பார்த்தோம். புரட்டாசி அமாவாசை கழித்த மறுநாள் அப்பெண் தெய்வத்தைத் தனியிடத்து நிறுத்தி, அதைத் தவம்புரி கோலத்தில் அமைய வைத்து, அந்தத் தவநெறிக்கு ஏற்ப வழிபாடாற்றுவர். மக்கள் ஒன்பது நாட்கள் தொடர்ந்து வழிபாடாற்றிய பின் அச்சிறப்பின் உச்ச நிலை இறுதி நாளில் வருகின்றது. அன்று எல்லாப் பொருளும் ஒய்வு பெறும். உழைக்கப் பயன்படும் அத்துணைக் கருவிகளும் ஒய்வுபெற்றுச் சிறப்பில்

கலந்துகொள்ளும். பள்ளியில் படிக்கும் பிள்ளைகளுக்கும் அன்று பெருநாளே. அவர்கள் அன்று படிக்க வேண்டுவதில்லை. அவர்கள் தங்கள் நூல்களையெல்லாம் அடுக்கிவைத்து வழிபாடாற்றுவர். எல்லாப் பொருளுக்கும் வழிபாடு ஆற்றப் பெறினும், சிறப்பாக அறிவு நலம் தரும் நூல்களே இவ்விழாவில் முதல் இடம் பெறுகின்றமையால், இவ்விழாவைக் 'கலை மகள்' விழா என்று வழங்கினர் போலும்! புராணத்திலே, தவ மிகுந்த அம்மை அந்த இறுதி நாளிலே தவம்கலைந்து உலகை அழித்து நின்ற ஓர் அரக்கனைக் கொன்றதாகக் கூறப்பட்டுள்ளது. அவ்வரக்கன் அறியாமை என்னும் அரக்கனாய் இருக்கலாம். அறியாமையைப் போக்கி அறிவொளியைப் பரப்பும் விழாவாய் இருக்கின்றமையினாலேதான் போலும் மைசூர் மக்கள் இவ்விழாவை விளக்கீட்டு விழாவாகப் போற்றி நாட்டில் நல்ஒளி பரப்பிப் புரக்கின்றார்கள்!

கலை மகள் விழா என்பது என்ன? கலை மகள் மக்கள் தோற்றத்தில் உருத்தாங்கி இருப்பவள் அல்லள். அறிவு கலை மகள் வடிவம். அழகு கலை மகள் தோற்றம். அன்பே கலை மகள் நிலைக்களன். இப்படி அமைந்த கலைமகளுக்குப் பின்னர் அடியவர் உருவம் கற்பித்தனர். இரவிவர்மர் அக்கற்பனைகளை நிலைக்களனாகக் கொண்டு, நிறம் குழைத்து ஓர் உருவைச் செம்மையாகத் தீட்டியிருக்கின்றார். அந்தப்படம் இந்து மக்கள் இல்லந்தோறும் இடம் பெற்றிருப்பதை அறியாதார் யார்!

அறிஞர் கலை மகளை வெறும் படத்தில் மட்டும் காணவில்லை. எங்கெங்குக் கலை மணக்கின்றதோ, அங்கங்கே கலை மகளைக் கண்டார்கள் அறிஞர்கள்.

கல்வியும் அறிவும், அவற்ருேடு இயைந்த பிற நலன்களும் சிறக்கும் இடங்களிலெல்லாம் கலை மகள் உருவம் அவர்தம் கண்முன் தோன்றும். ஆகவே, கலை மகள், கல்விக்களஞ்சியம், அறிவின் ஊற்று என்ற வகையிலே அவளைக்கண்டு, அந்த நோக்கத்திலேயே விழாவினையும் ஆற்றி வந்தார்கள்.

கலை மகளைக் கண்ட அறிஞர் பலர். அவளது அறிவாற்றலை வியந்து போற்றிய அறவோர் பலர். அண்மையில் நம்மிடை வாழ்ந்து மறைந்த அண்ணல் பாரதியார் அக்கலை மகளின் இருப்பிடத்தைப் பல படியாகப் போற்றுகின்ருர் :

" மாதர் தீங்குரல் பாட்டில் இருப்பாள்
மக்கள் பேசும் மழலையில் உள்ளாள்
கீதம் பாடும் குயிலின் குரலைக்
கிளியின் நாவை இருப்பிடம் கொண்டாள்
கோத கன்ற தொழில்உடைத் தாகிக்
குலவு சித்திரம் கோபுரம் கோயில்
ஈதனைத்தின் எழிலிடை யுற்ருள்
இன்ப மேவடி வாகிடப் பெற்ருள் "

என்று அவர் கலை மகளை மக்கள் முன் கொண்டுவந்து காட்டுகின்ருர். ஆம்! கலை மகள் இனிய பெண்கள் குரல் ஓசையில், மக்கள் மழலை மொழியில், குயிலின் பாட்டில், கிளியின் இன்சொல்லில் இனிமையாகக் காட்சி அளிப்பதை அவர் கண்டு கண்டு மற்றவருக்கும் காட்டுகின்ருர். மேலும், எங்கெங்கு அழகு விளங்குகின்றதோ, அங்கங்கெல்லாம் அவள் தோற்றம் விளக்கமாக அவருக்குத் துலங்குகின்றது. அவள் வடிவத்தை இன்பமாகவே கண்டு துய்க்கின்ருர், அவர் இயற்கைப்

பொருள்களொடு ஒன்றி அவற்றின் அழகில் திளைத்து ஆனந்தப் பாட்டிசைத்தவ ரல்லரோ! அந்த நிலையில் கலை மகளை அழகோவியமாகக் கண்டதில் வியப்பில்லை யல்லவா!

அக்கலை மகளைக் காட்டிய பாரதியார், அதே மூச்சில் அவளுக்கு ஆற்ற வேண்டிய வழிபாட்டையும் குறிக்கின்ருர். நாம் மேலே கண்ட நவராத்திரி, சரஸ்வதிபூசை ஆகியவற்றை மக்கள் எவ்வாறு கொண்டாடுகின்றனர்? இன்று அவ்விழாக்களில் வெறும் பொம்மைக் கொலுத்தானே காட்சிதருகின்றது? பொம்மைகளுக்குத்தாம் அந்த மாதத்தில் எவ்வளவு கொண்டாட்டம்! குழந்தைகளுக்கு— சிறப்பாகப் பெண் குழந்தைகளுக்கு — இவ்விழா என்ருல் ஒரே மகிழ்ச்சி. ஏன், பள்ளிக் கூடங்களில் கூட இவ்விழாவைக் கொண்டாடத் 'தசரா' விடுமுறை தருகின்ருர்களே! நம் சென்னை அரசாங்கத்தார் கூட, கடந்த சில ஆண்டு களாக இத்தசராவுக்கு அதிக விடுமுறை நாட்களைத் தருகின்ருர்களே! ஆகா! இந்த விடுமுறை நாட்களிலே தான் குழந்தைகள் என்னென்ன கேட்கிருர்கள்!

செல்வரும் வறியரும் தத்தம் நிலைமைக்கேற்பப் பொம்மைகளை வரிசையாக அடுக்கி அழகுபடுத்து கின்றனர். மாவிலைத் தோரணமும் வாழையும் கமுகும் கட்டி வீடுகளை அலங்கரிக்கின்றனர். பெற்ருேர் தம் குழந்தைகளைப் பட்டாலும் பொன்ளுலும் அழகு செய்கின்றனர். குழந்தைகளும் பெரியவர்களும் வீடு வீடாகச் சென்று, தத்தம் வீட்டில் கொலு வைத்திருக் கும் அழகினை வந்து பார்க்கச் சுற்றத்தினரையும் நண்பரையும் அழைக்கின்ருர்கள். சில வீடுகள்

திருமண விடுகளோ என்னுமாறு காட்சி அளிப்பதை யாரே அறியாதார்! இவ்வாறு உற்ருர் உறவினரையும் மற்ருரையும் அவ்வேடிக்கைப் பொம்மை வரிசையைக் காணுமாறு அழைக்கும் காட்சி நமக்கு எதை நினைவூட்டு கின்றது? பல்வேறு விழாக்களில் நாம் பார்த்த அந்த அக்காட்சி செம்மை வாழ்வின் ஒரே அடிப்படைக்கு நம்மை ஈர்த்துச் செல்லுகின்றது.

விழா என்ருல் மக்கள் வாழ்வை வளம்படுத்துவது என்பதுதானே பொருள்! செல்வரும் வறியரும் வேறுபாடு இல்லாத ஒன்றை நினைவூட்டுவதுதானே விழா! பெற்றது கொண்டு சுற்றம் அருத்தும் பண் பாடே விழாவின் அடிப்படை. நாட்டில் பசியும், பிணியும், பகையும் நீங்குவதே விழாவின் குறிக்கோள் என்பதைக் கண்டோம். அதே குறிக்கோள்தான் இந்த விழாவினுடைய அடிப்படையாகவும் அமைகின் றது. பொம்மைக் காட்சியாயினும், கதிரவன் காட்சியா யினும், விளக்கீட்டு விழாவாயினும், அன்றிக் கடவுளர் காட்சி நல்கும் பெருவிழாவாயினும் தமிழர் கொண் டாடும் அந்த எல்லா விழாக்களின் அடிப்படையும் ஒன்றேதான். அதுதான்,

‘ பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி ’

அதைச் செயலிலும் மேற்கொண்டு, அனைவரையும் ஒன்று சேர்த்து வைப்பது. இந்த அடிப்படையை இக்கலைமகள் விழாவில் பங்கு கொள்ளும் அனைவரும் அறிவர். மக்கள் வீட்டுக்கு வருவோரை இன்முகம் காட்டி அழைக்கும் காட்சி இவ்வுண்மையை உணர்த் தாமற் போகாது.

இனி மேலே செல்வோம். நவராத்திரி ஒன்பது நாட்களிலும் இவ்வாறு வீட்டில் பொம்மைகளையும், கோயிலில் தெய்வத்தையும் 'கொலு' நிறுத்தும் மக்கள், இறுதி நாளில் கலைமகள் விழாவினைக் கொண்டாடுகிறார்கள். அன்றுதான் மேற்சொன்ன வகையில் அனைத்தையும் அடுக்கியும் வரிசைப்படுத்தியும் வைப்பார்கள். அவற்றிற்கு மஞ்சளும் குங்குமமும் இட்டு மலர் சூட்டுவர். பின் பல்வகைப் பண்டங்கள் செய்து வைத்து வழிபடுவார்கள். அடுத்துச் சுற்றத்தோடு கலந்து உண்பார்கள். பின் விழா முடிவுறும்.

இவ்விழா நாளிலே பொம்மைகளை மட்டும் அடுக்கி வைப்பதோடு—நூல்களைமட்டும் அடுக்கி வைப்பதோடு—பல ஆயுதங்களையும் வரிசையாக வைத்து வழிபடுவார்கள். எனவே இதற்கு 'ஆயுத பூசை' என்ற மற்றொரு பெயரும் உண்டாயது. 'பொருள்தனைப் போற்றிவாழும்' பண்பு தமிழர்களுடையது. எனவே தங்களுக்கு உதவும் எந்தப் பொருளையும் பொன்னே போல் போற்றுவது அவர்தம் வழக்கம். பெரும்பாலும் உழவுத் தொழில் புரியும் தமிழர்களுக்குத் தங்கள் உழவுக்கு உறுதுணையாகிய மாட்டுக்கு மாட்டுப் பொங்கலில் வழிபாடாற்றுவது நாமறிவோம். அப்படியே இந்த விழாவில் அவ்வுழவுக்குப் பயன்படும் பிற பொருள்களை யெல்லாம் வைத்து வழிபடுவார்கள். தமிழ் நாட்டில் ஆனிதொடங்கி ஆவணிமுடிய உழவு வேலைகள் பெரும்பாலும் முடிவுறும். பின் நல்ல மழை பெய்ய வளம் செழித்துக் கார்த்திகையிலும் அடுத்தும் அறுவடைக்குப் பயிர்கள் தயாராகும். எனவே உழவுக்குப் பயன்படும் கலப்பை முதலிய உழவுக்கருவிகளுக்கு

ஆவணி தொடங்கி ஓய்வே. மறுபயிருக்குச் சில திங்கள் கழித்து அவை தேவைப்படலாம். எனவே ஆண்டின் முதல் பயிருக்குத் தேவையாகின்ற எல்லாக் கருவிகளையும் கழுவித் துப்புரவு செய்து பொட்டிட்டுப் பூவிட்டுப் போற்றி உள்ளே எடுத்து வைப்பார்கள். அதையே அவர்கள் அன்று விழாவாகக் கொண்டாடினர் கள். இன்று, இவ்விழா உழவுக்கருவிகளைப் போற்றுவ தோடு அன்றி, கைத்தொழிற்சாலையில் உள்ள எல்லாக் கருவிகளையும் போற்றும் வகையிலே ஆற்றப்படுகின் றது. எனவே இது தமிழன் உயிரற்ற கருவிகளுக்குக் காட்டும் நன்றி அறிதல் விழாவே யாகும். இதில் நூலையும் கருவியையும் போற்றிப் பெற்றது கொண்டு சுற்றம் அருத்தித் தாமும் மகிழ்ந்து உண்டார்கள்.

இந்த வகையில் விழாக் கொண்டாடுவது ஒரு வகையில் சிறந்ததுதான். நல்ல உணவு செய்து, சுற்றத்தாருடன் கலந்து விழாக் கொண்டாடல் தமிழ் நாட்டில் நடைபெறுவதுதான். ஆனால், அத்துடன் விழா முடிந்துவிட்டது என்று எண்ணினால் தவறு நேர்கின்றது. கலை மகளை இந்த வகையில் கொண்டாடு தல் தவறு என்று சொல்லவில்லை. நன்றாகக் கொண் டாடட்டும். ஆனால், இந்த விழாவின் அடிப்படையை மறந்துவிடுகின்றோமே! கலை மகள் கல்விக்கு அடிப் படையானவள். அக்கல்வியை மக்களுக்கு அளிப்பது தான் கலை மகள் விழா. நாட்டில் எல்லாரையும் கற் றவராக்கக் கங்கணம் கட்டிக்கொள்ளுதலே இந்த விழாவின் குறிக்கோளாக இருக்க வேண்டும்.

நம் நாட்டில் விழா ஆற்றுவது போல, உலகில் வேறு எந்த நாட்டிலும் இவ்விழா ஆற்றப்படவில்லை.

ஆம்! அப்படியிருந்தும். நம் நாட்டில் கற்றவர் மிகக் குறைவே. கலை மகளைத் தெய்வமாக்கி விழாக் கொண்டாடா நாடுகளிலெல்லாம் நூற்றுக்கு எண்பது பேருக்குமேல் படித்தவர் இருக்க, கலை மகளைத் தெய்வ மாகப் போற்றி விழாக்கொண்டாடும் நம் நாட்டில் நூற்றுக்குத் பதினைந்து பேருக்குமேல் கற்றவர் இல்லை என்பது எதனுல் நேர்கின்றது? ஆம்! அடிப்படையை மறைந்ததனுலே தான். நாட்டில் உள்ள ஏழை எளிய வர்களுக்கு எழுத்துக் கற்றுக் கொடுத்தலே கலைமகள் விழா. ஊர்தோறும் பள்ளிக்கூடங்கள் உண்டாக்குவதே கலைமகள் விழா. அறியாமையைப் போக்கி, அறிவை வளர்ப்பதே கலைமகள் விழா. எல்லாருக்கும் வாக்குரிமை உள்ள இந்த நாளில் அனைவரையும் கற்ற வராக்கும் கலைக் கழகங்கள் நாட்டின் மூலைமுடுக்கு களிலெல்லாம் உண்டாக வேண்டும். அதை விடுத்து வெறும் மந்திரத்தைச் சொல்லி மலரிட்டு அடுக்கிய நூல்களை அர்ச்சித்தால் அது உண்மையில் கலைமகள் விழாவாகாது. இதையே பாரதியார்,

'செந்த மிழ்மணி நாட்டிடை உள்ளீர்!
சேர்ந்துஇத் தேவை வணங்குவ வாரீர்,
வந்த னம்இவட் கேசெய்வ தென்றுல்
வாழி! அஃதுஇங்கு எளிதன்று கண்டீர்!
மந்தி ரத்தை முணுமுணுத்து ஏட்டை
வரிசை யாக நிறுத்தி அதன்மேல்
சந்த னத்தை மலரை இறைத்தல்
சாத்திர ம்இவள் பூசனை அன்றும்'

என்று சற்று வன்மையாகவே கண்டிக்கிருர். ஆனுல், அவர் கண்டிப்புச் சில இன்றைய அரசியல் தலைவர்களைப் போன்று வெறுங்கண்டித்தலோடு மட்டும் நின்றுவிட

வில்லை. அது வேண்டா என்றால் வேறு செய்ய வேண்டுவது என்ன என்பதைத் தடுக்கிறவர்கள் உணர்த்துவதுதானே விவேகம்? நாட்டில் பலர் இன்று அதைச் செய்வதில்லை. 'இது தவறு; இது வேண்டா; அது தவறு; அது வேண்டா' என்று கூறும் பலரும், வேண்டாததை நீக்கி, வேறு எப்படித் தொழிற்பட வேண்டுமென்று ஆக்கப் பணிக்கு வழி காட்ட மாட்டார்கள். ஆனால், பாரதியார் அவ்வாறு விட்டு விடுவதில்லை. இந்த வெறும் பூசையை வேண்டா என்ற பாரதியார், வேறு என்ன செய்ய வேண்டும் என்று மூச்சொடு மூச்சாகப் பாடிக் காட்டுகின்றார்.

'வீடு தோறும் கலையின் விளக்கம்
வீதி தோறும் இரண்டொரு பள்ளி
நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள்
நகர்க ளெங்கும் பலபல பள்ளி
தேடு கல்வி இலாததோர் ஊரைத்
தீயி னுக்குஇரை யாக மடுத்தல்
கேடு தீர்க்கும் அமுதமென் அன்னை
கேண்மை கொள்ள வழியிவை கண்டீர்'

என்று திட்டமாக வழிகள் இவை இவை என்று எடுத்துக்காட்டுகின்றார். ஆம்! 'வீடெல்லாம் கலை மணம் கமழுமாறு அனைவரும் படித்திருக்க வேண்டும். தெருவுக்கு ஒரு பள்ளியாவது கட்டாயம் இருக்க வேண்டும். நகரங்களிலே நிரம்பப் பள்ளிகள் தேவை' என்று ஆக்கப்பணிக்கு வழி காட்டிய பாரதியார், அப்படியும் அவர் ஆசைப்படி பள்ளிக்கூடம் அமைக்க ஓர் ஊர் முன் வரவில்லையானால் அந்த ஊரைச் சுட்டுப் பொசுக்கவேண்டும்' என்றும் கூறுகின்றார். உண்மை தான்! அறியாமை வயப்பட்டு, விலங்கினும் கேடாக,

ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாயத் தாழ்ந்து, தமக்கும் தம் நாட்டுக்கும் அவச்சொல்லை உண்டாக்கிகொண்டு உலுத்தராய் வாழ்வதைக்காட்டிலும், அவர்களும், அவர் வாழும் ஊரும் அழிந்தொழிதல் எவ்வளவோ மேல்தானே? அந்த ஊர் நீங்கினல் நாட்டின் மற்றைப் பகுதிகளாவது நல்ல பெயரும் புகழும் பெற்று அறிவு விளக்கமுற்று வாழும் அல்லவா?

இவ்வளவு ஆத்திரத்தோடு கூறினலும், பாரதியாருக்கு ஊரையெல்லாம் அழிக்க வேண்டும் என்ற எண்ணம் இல்லை. 'பகைவனுக் கருள்வாய்' என்று பாட்டிசைக்கும் அவர் நெஞ்சம், இக்கொடிய செயலுக்கு இடம் தருமா? தாராது; எனினும், நாட்டில் கலைமகளுக்கு விழாவினைக் கொண்டாடிக்கொண்டே, அக்கலைமகளின் வாழ்வாகிய அறிவைக் குழிதோண்டிப் புதைக்கும் நிலை கண்டு அவர் நெஞ்சம் குமுறுகின்றது! அவ்வளவுதான்! இன்றைய அரசாங்கத்தார் அவர் எண்ணத்தை ஓரளவு நிறைவேற்றும் வகையில் புத்தம் புதிய பள்ளிகளை ஆண்டுதோறும் உண்டாக்கிக் கொண்டே வருகின்ருர்கள். இன்னும் சில ஆண்டுகளில் இளம்பிள்ளைகள் அனைவரையும் கட்டாயமாகப் படிக்கவைத்து, எல்லாரையும் அறிவுடையவராக்கத் திட்டங்களும் முன்னிற்கின்றன. எப்படியோ பாரதியார் ஆசை நிறைவேறவேண்டும் என்பதுதான் நம் ஆசையும்.

அந்தக் கலைமகள் விழாவாகிய ஆக்கப் பணிக்கு நாட்டில் உள்ள அனைவரையும் அழைக்கின்ருர் பாரதியார். செல்வரும் வறியரும் ஆடவரும் பெண்டிரும் அனைவரும் கலந்து வீட்டில் விழா ஆற்றுவது

போன்று, பொது வீடாகிய நாட்டிலும் கலந்து விழா வாற்ற விழைகின்றார் பாரதியார் :

‘ நிதிமி குத்தவர் பொற்குவை தாரீர் ;
நிதிகு றைந்தவர் காசுகள் தாரீர் ;
அதுவு மற்றவர் வாய்ச்சொல் அருளீர் ;
ஆண்மை யாளர் உழைப்பினை நல்கீர் ;
மதுரத் தேமொழி மாதர்க ளெல்லாம்
வாணி பூசைக்கு உரியன பேசீர் ;
எதுவும் நல்கிஇங்கு எவ்வகை யானும்
இப்பெ ருந்தொழில் நாட்டுவம் வாரீர் !’

என்று அவர் உள்ளம் வழிந்து உதட்டில் பாட்டாக வருகின்றது. உயிரையும் பிறிது எதையும் கொடுத்தாகிலும் நாட்டில் கல்வியைப் பரப்ப வேண்டும் என்பதை இவர் இறுதி அடிகளில் எவ்வாறு திட்டமாகக் காட்டுகின்றார்! நாமும் அவரைப் பின்பற்றிக் கலைமகள் விழாவினைக் கொண்டாடின், நாட்டில் கல்வி விளக்கமுறும் ; விழாவின் பலனும் கைகூடும். அப்பணிக்கு இக் கலைமகள் விழா நாளிலே ‘வருக’ என அனைவரையும் அழைக்கின்றேன்.



விளக்கு மங்கலப் பொருள். அதன் ஒளி நல் அறிவு காட்டுவது. உலகில் மக்கள் நல்லறிவு பெற்றுத் துன்ப இருளில் இருந்து விடுபட்டு அஞ்ஞான மயக்கம் அகன்று, வாழ்வாங்கு சிறக்க வாழ வழிகாட்டியாக உள்ளது விளக்காகும். இவ் விளக்கு வீடுதோறும் ஏற்றப்படுகின்றது. உயர்ந்த பெரு உப்பரிகைகளாயி னும் சரி, சாதாரண எளிய குடில் ஆயினும் சரி விளக் கொளி படாதிருக்கமாட்டா. விளக்கின் தன்மையில் வேண்டுமாயின் வேறுபாடு இருக்கலாம். பெருமாளிகை களில் மின் விளக்குகள் ஒளிகாட்டலாம். சிறு குடிசை களில் அகல் விளக்குகள் இருக்கலாம். அவை அவை தத்தம் தன்மைக்கும் அளவுக்கும் ஏற்ப ஒளி தந்து தம்மை அடுத்து வாழ்வோருக்கு வாழ்க்கை விளக்கங் களாக அமைகின்றன. பழங்காலத்திலே மக்கள் வாழ் வோடு பிணைந்த காவியம் பாடிய புலவர்கள் இவ் விளக்கு ஒளிபற்றியும் காட்டுகின்றனர்.

கிளிஞ்சல் விளக்கு

நற்றிணை என்பது சங்ககாலப் பாடல்களின் ஒரு தொகுப்பு. இதில் கடற்கரையில் வாழும் நெய்தல் நில மக்கள் கடல்மேற் சென்று மீன் வளத்தை வாரிவந்து, மணற் பரப்பிலே இட்டு, பிறகு விளக்கொளியில் உறங்குவார்கள் என்று காட்டப்பட்டுள்ளது. அவ் விளக்கிற்கு நெய்யாகப் பயன்படுவது மீன் கொழுப் பாகும். கலசமாவது கிளிஞ்சலாகும். கிளிஞ்சலின் குழிந்த பகுதியிலே நெய்யைவிட்டு விளக்கேற்றுவர் போலும். இன்று கடல்படு கிளிஞ்சல் முதலியவற்றில் பல்வேறு கண்கவர் பொருள் செய்யும் காட்சியை நாம் காண்கிறோம். அன்று கிளிஞ்சல் கலசமாகப் பயன் பட்டது. இவ்வுண்மையை,

' நெடுங்கடல் அலைத்த கொடுந்திமில் பரதவர்
கொழுமீன் கொள்ளை அழிமணல் குவைஇ
மீன்நெய் அட்டிக் கிளிஞ்சல் பொத்திய
சிறுதீ விளக்கில் துஞ்சம் '

என்று நற்றிணை 175-ஆம் பாட்டு விளக்குகிறது. இந்த நல்ல விளக்கம் தந்த ஆசிரியர் பெயரை நாம் அறியோம்.

இதே நற்றிணையில் மதுரைக் கள்ளம்போதனர் என்பார் மாலைக்காலத்து நெய்தல்நில மக்கள் ஏற்றும் விளக்கினைக் காட்டுகின்றார். கீழைக் கடல் தோன்றிய கதிரவன் மேலைக் கடலுள் மறைய நின்ற மாலையில் வளை யணிந்த மகளிர் விளக்கேற்றுவார்களாம்.

' குணகடல் இவர்ந்து குருஉக் கதிர்பரப்பி
பகல்கெழு செல்வன் குடமலை மறைய
புலம்புவந்து இறுத்த புன்கண் மாலை

இலங்குவளை மகளிர் வியல்நகர் அயர
மின்நிரைம் தொகுத்த ஊன்நெய் ஒண்சுடர்'

— நற்றிணை, 215

என்பது அவர் வாக்கு. மற்றொரு தொகை நூலாகிய குறுந்தொகையில் உறையூர் முதுகூத்தன், நல்ல பஞ்சாலாகிய திரியினால் விளக்கேற்றும் சிறப்பைப் 'பஞ்சு வெண்திரிச் செஞ்சுடர்' (குறுந்தொகை 353) எனப் பாராட்டுகின்றார்.

விளக்கு வரிசை

இவ் விளக்கு ஏற்றுவது நாள் தோறும் நடைபெறுகின்ற நிகழ்ச்சியே என்றாலும் மாரிக்காலத்தே அவ் விளக்கை அழகுபட வரிசையாக ஏற்றிவைத்துப் பழந் தமிழ் மக்கள் நல்விழாக் கொண்டாடினர். இவ் விழா வினைப்பற்றி அகநானூற்றில் ஔவையார், நக்கீரர் போன்ற புலவர்களும் (அகம், 11, 141) பிற்காலத்தில் வந்த ஞானசம்பந்தர்போன்ற சமயத் தலைவர்களும் நன்கு பாராட்டிப் போற்றுகின்றனர்.

இவ்விழா தமிழ் நாட்டில் கார்த்திகை விளக்கீடாகவும், தீபாவளியாகவும் கொண்டாடப் பெறுகிறது. 'தீபாவளி' என்பதை 'விளக்கு வரிசை' என்று கொள்வார். இவ்விழா வடநாட்டு விழாவாயினும் தமிழ் நாட்டிலேயும் இன்று ஒரு பெருவிழாவாகவே கொண்டாடப் பெறுகின்றது.

கண்ணன் நரகாசூரன் என்பானை மக்கள் வாழ்வின் பொருட்டுக் கொல்ல, இறக்க இருந்த சூரன் நாடு தன் நாளைக் கொண்டாட வேண்டும் எனக் கேட்டுக்கொள்ள, அதன்படி கண்ணன் வரம் தந்தான் என்றும், அந்நாளே

இந்நாளாகக் கொண்டாடப் பெறுகின்றது என்றும் கூறுவர். கதைபற்றி நாம் சிந்திக்கவேண்டா ; கருத்து தேவை. கொல்லும் சினத்தோடு மாற்ருரை அழிக்கும் உள்ளத்திலேயும் அன்பெனும் நல்விளக்கம் அமையின், அம்மாற்ருன் வேண்டுகோளை அந்த மனித உள்ளம் கட்டாயம் கேட்கும் என்பதே இதன் கருத்து. நம் மாற்ருன் மிகக் கொடியவனுயினும், கொல்லப்படத் தக்கவனுயினும், அவன் வேண்டுகோள் நலம் பயப்பதாயின் வேறுபாடு மறந்து வேண்டியது செய்யவேண்டும் என்பதே உட்கிடை. இவ்வுண்மையை அறிய அனைவர் உள்ளத்திலும் ஒளிவிளக்கு ஏற்றப்படவேண்டும்.

### அக விளக்கு

உள்ளத்து ஒளிவிளக்கைப் பற்றிப் பல ஒழுக்க சிலர்கள் பாடியுள்ளார்கள். அறிவும், அருளும், அன்பும், பண்பும் நல் விளக்கத்தால் நாம் பெறுவனவே என்று எண்ணிய புலவர்,

'கைவிளக்கே கற்ற அறிவுடைமை கைவிளக்கின்
நெய்யேதன் நெஞ்சத்து அருளுடைமை நெய்பயந்த
பால்போல் ஒழுக்கத் தவரே பரிவிலா
மேல் உலகம் எய்து பவர் '

எனக் காட்டுகின்ருர்.

எனவே புறத்திருளை நீக்கும் அகல் விளக்குப் போன்று அகத்திருளை நீக்கும் நல்விளக்கும் நமக்குத் தேவை. வீடு முழுதும் விளக்கேற்றி வைத்துவிட்டு, உள்ளத்கே இருட்டை அடைத்துவைத்தால் அது மனிதப் பண்பு அன்று. எனவே புற விளக்குகள் பொலியும் இந் நன்னுளில் அக விளக்கு ஏற்றுங்கள் என்று

நான் கேட்டுக் கொள்கிறேன். பல அடியவர்கள் இவ் வுண்மையை நன்கு விளக்குகிறார்கள்.

இறைவன் அடிகளைக் கண்ட அப்பர் பெருமான் தான் எந்தவகையில் விளக்கேற்றி இறைவனைக் கண்டார் என்பதை,

"உடம்பெனும் மனையகத்து உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய் அட்டி உயிர் எனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தியால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே"

(தனிநேரிசை)

என விளக்குகிறார்கள்,

## ஒப்பிலா இறைவன்

எவ்வுயிரும் தன் உயிராகக் கொண்டிலங்கும் இறைவனை உணர்ந்து போற்றுவது எளிதன்று. அப்பர் போன்ற அடியவர்கள் போற்றினார்கள். ஆழ்வார்களுள்ளே இரு பெரியவர்களும் இவ்வுள்ளொளி பெருக்கி ஒப்பிலா இறைவனை உள்ளத்தும் உலகத்தும் கண்டு வழிபட்டார்கள். தாம்பெற்ற அனுபவ இன்பத்தினை உலகமும் பெற்று உய்யவேண்டுமெனப் பாட்டிசைத்தார்கள். இதோ அவர் பாட்டுக்கள்.

'வையந் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொல்மாலை
இடராழி நீங்குகவே என்று'

எனப் பொய்கையாழ்வாரும்,

'அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா—நன்புருகி

ஞானச் சுடர்விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான் '

என்று பூதத்தாழ்வாரும் பாடியுள்ளவை அறிந்து மகிழத் தக்கன.

விளக்கேற்றுவோம் வாரீர்

இவ்வாறு வீட்டில் விளக்கேற்றி வைப்பதோடு, நாட்டிலும் நல்ல உள்ளத்திலும் விளக்கேற்ற வேண்டியது மிகமிக இன்றியமையாத ஒன்று. மின் விளக்கால் புற உலகை ஒளி செய்யும் இந்த நூற்றுண்டு நாகரிகம் அகத்தை விளக்க அன்பு விளக்கை ஏற்ற அவாவவில்லை. அதனுலேயே நாட்டிலேயும் உலகிலேயும் பலப்பல கொடுமைகள் விளைவதைக் காண்கிறோம். சமயத்தலைவர்களும், ஒழுக்க நெறிப் பண்பாடு பற்றியவர்களும், பிற நல்லவர்களும் காட்டியபடி ஒருசேர உள்ளும் புறமும் ஒளிவீச நல்விளக்கு ஏற்றுவார்களானல் நாட்டில் நன்மை மிகும்; நலம் விளையும். பண்பு சிறக்கும்; பயனும் காண முடியும். இந்த நற்பணியை மனிதன் என்றே செய்திருக்கவேண்டும். செய்யத் தவறி விட்டான். இனியாகிலும் தன் தவறு உணர்ந்து உள்ளும் புறமும் ஒருசேர ஒளிர வழி தேடுவானயின் நலமுண்டு. உலகில் வாழும் அனைவருக்கும் இவ் விளக்கேற்றும் பணியில் பங்கு உண்டு. எனவே "விளக்கேற்றுவோம் வாரீர்" என்று உலக மக்களை நோக்கி இந்த நல்ல நாளில் வேண்டுகோள் விடுகிறேன்.

# கார்த்திகை விளக்கீடு 

ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன் இன்று புத்தம் புதிய நாகரிகத்தோடு விளங்கும் சென்னை நகர் இல்லை. என்றாலும் திரு மயிலையும், திரு ஒற்றியூரும்' திரு அல்லிக்கேணியும் அன்று இன்றைய நிலையைக் காட்டிலும் பொலிவோடும் புகழோடும் விளங்கியிருந்தன. இன்று இவை சென்னையின் உறுப்புக்களாய் அமைந்துள்ளன. அன்று சோலையிடையிட்ட தனித் தனிப் பேரூர்களாய் இவை விளங்கியிருக்க வேண்டும். வடக்கே ஒற்றியூரிலும், தெற்கே மயிலையிலும் மக்கள் நன்கு வாழ்ந்து வந்தனர். நாகரிகமும் பண்பாடும் நல்லுள்ளமும் பெற்ற மக்கள், சிறந்த விழாக்கள் பல கொண்டாடி, தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு வாழ்ந்து வந்தார்கள். அவர்தம் ஒழுக்கமும் வாழ்க்கை முறையும், வெறும் புகட்டாக அமையாமல், பாங்கோடு பொருந்தியனவாய் இருந்தன.

அந்த நாட்களில் ஒரு நாள் ஒற்றியூரில் சைவம் வளர்த்த பெரியார் ஞானசம்பந்தர் வந்து தங்கியிருந்

தார். அவர் வரவறிந்த மயிலையில் வாழ்ந்த சிவநேசர் என்பார் ஒற்றியூர் சென்று சம்பந்தரைத் தம் ஊருக்கு வருமாறு வேண்டினர். தம் ஒரே மகள் பூம்பாவை என்பாள் விடந்தீண்டப்பெற்று இறந்தாள்; அவளது எலும்பினைத் தமது வீட்டில் ஒரு குடத்தில் இட்டு வைத்திருந்தார் அவர்; ஞானசம்பந்தரிடம் நீங்காத பத்தி கொண்டிருந்த காரணத்தால், அவர் விரும்பினல் எலும்பும் பெண்ணுகும் என முடிவு செய்திருந்தார்; அவர் எப்போது வருவார் என எதிர்நோக்கியிருந்தார். ஆம்! ஒற்றியூரில் வந்துள்ளதை அறிந்து, ஓடிச்சென்று, மயிலை வரவேண்டினர்; வேண்டித் தம் கருத்தையும் வெளியிட்டார். சம்பந்தரும் அவர் விருப்பப்படி மயிலை சென்று கபாலியின் முன் நின்ருர். எலும்புக் குடம் கொண்டு வரப்பட்டது. ஒவ்வொரு பாட்டாகப் பாடி, பதிகம் முடித்து, எலும்பைப் பெண்ணுக்கினர் சம்பந்தர். அவர்தம் பதிகத்தே ‘மயிலையில் நடை பெறும் பல விழாக்களைக் காணது பூம்பாவை போதல் சரியன்று’ என்று கூறி எழுந்துவரச் செய்தார். அவற்றுள் ஒரு பாட்டு இது:

“வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலிச் சரத்தான்தொல் கார்த்திகைநாள்
தளத்தேந்து இளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணுதே போதியோ பூம்பாவாய்!”

மங்கைமார்கள் சிறப்புறக் கொண்டாடும் இவ் விளக்கீட்டு விழாவினைக் கார்த்திகை நாள் விழா எனக் குறிக்கின்ருர் சம்பந்தர். அதுவும் மிக்க பழங்கால முதலே இவ்விழா போற்றப்பட்டு வந்த தென்பதைத் ‘தொல் கார்த்திகை நாள்’ என்கின்ருர். எனவே,

